உ

சிவமயம்.

# திருப்பேரூர் வெண்பாவந்தாதி.

இஃது

கோயமுத்தூர்

டிஸ்டிரிக்டு முன்சிப்கோர்ட்டு வக்கீல்

G. வீராசாமி பிள்ளையவர்களால்

இயற்றப்பட்டது.

கோயமுத்தூர்

கே. ஆர். வெங்கட்டரமணய்யர் அண்டு கோ.

அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

1897.

# சிறப்புப்பாயிரம்.

---

இஃது
மகாவித்வான் மகா-ள-ள-ஸ்ரீ சந்திரசேகரம்பிள்ளை யவர்கள்
குமாரரும், மகாவித்துவான் மகா-ள-ள-ஸ்ரீ கந்தசாமி முதலி
யாரவர்கள் மாணாக்கரும், கோயமுத்தூர் லண்டன்மிஷன்
ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதருமாகிய மகா-ள-ள-ஸ்ரீ
**ச. திருச்சிற்றம்பலம் பிள்ளையவர்கள்**
இயற்றியது.

---

நேரிசை வெண்பா.

அந்தாதி யில்லா வரசவனத் தீசற்கோர்
அந்தாதி யொன்றிங் கணிவித்துப்—பிந்தா
வளம்பெறுவீ ராசாமி மன்னவர்கோன் றீர்த்தான்
குளம்பெறுமக் கண்ணன் குறை.

உ

சிவமயம்.

# திருப்பேரூர் வெண்பாவந்தாதி.

## விநாயகர் துதி.

பேரூர்வாழ் பட்டிப் பெருமா னுக்கந்தாதிச்
சீரூர்வெண் பாமாலை செப்பவே—காருரு
மந்தரத்தை வென்ற மணிப்புயஞ்சே ரைங்கரனார்
சுந்தரத்தா ளுண்டே துணை.

## நூல்.

திருவிருக்கும் வாசச் செழுமலர்போற் போதிப்
பெருவிருக்க மேவிவளர் பேரூர்—பொருவிருக்கை
செப்புவனப் புள்ளபல தேவரிதை நாடுவதா
லெப்புவனத் துள்ளு மிலை. (1)

இலைக்கமுகிற் காய்சிதற வேறிப்போய் மந்தி
குலைக்கமுகின் மீதசினங் கொண்டு—வலைக்கமையா
வீரவரால் பாய்கழனி மேவுதிருப் பேரைநகர்
சாரவரார்க் கூழ்வலிது தான். (2)

தாவு கதிர்ச்சாலித் தண்பணையி லொண்கமல
மேவு கதிர்ச்சால வெண்மணியைத்—தேவுலகச்
செங்கான் மடவன்னஞ் சேர்ந்தணையும் பேரைநகர்க்
கெங்கார் நவில்வா ரிணை. (3)

இணைக்கழைமென் றோளார்க் கிகலொழியக் கொய்து
பணைக்கிளையென் றய்க்கும் பழியாற்—கணைக்கமல
மண்ணிற்போய் நின்ற மதன்சிலைமே லோங்கநறை
நண்ணிப்பாய் பேரைநகர் நாடு. (4)

நாட்டங்கண் மூன்றுடைய நாயகன்பே ரூரிலொரு
நாட்டங்க வெவ்வினையு நாசமுறும்—வாட்டங்கள்
கொண்டலையா தெய்திக் குழக னடியிணையைக்
கண்டலைமேற் கொள்வீர் கனிந்து. (5)

கனிவா ருளமகலாக் கண்ணுதலார் பெண்ணைத்
தனிவார் சடையிற் றரித்தார்—பனிவாரி
வந்தநஞ்சை யுண்டார் மகிழ்ந்துறையும் பேரூரை
வந்தனஞ்செய் தேத்தமிகும் வாழ்வு. (6)

வாட்டடங்க ணல்லார் மகரயாழ் தொட்டிசைக்கும்
பாட்டடங்கச் சூழ்ந்த பலகனிவாய்க்—கேட்ட
குருக்கத்தி பூத்தக் குலுங்குகின்ற பேரூர்
சுருக்கத்திற் பேசுவதோ சொல். (7)

சொற்போர் நிபுணர் சுகப்போர் மதர்விழியார்
நெற்போ ருழவர் நினைப்போராய்—நற்போத
மேவித் திருப்பேரூர் வேதண்ட வெற்பாகப்
பாவித் திருப்போர் பதி. (8)

பதியகலாச் செல்வப் பதுமியோடு சொல்லின்
முதியகலா வல்லி முயங்கும்—புதியகலா
மாமதிக்குஞ் சாடுசடை மாதிடத்தன் பேரையிதை
யாமதிக்குஞ் சால்பினரன் முல். (9)

ஆலுண்ட கண்ட னமர்பேரை மாநகரின்
பாலுண்ட கண்ட பரானந்தங்—காலுண்டி
கொண்டே னுடல்வருந்தக் கோருகின்றீர் மாதவத்தீர்
விண்டே னணைவீர் விரைந்து. (10)

விரைக்கமல வேதா வினைப்பயனை யுண்டு
நிரைக்க மலதேக நேர்ந்தான்—மரைக்கழலா
மன்னபயச் செங்கை மலர்காட்டும் பேரூரா
வென்னபயன் கண்டே னிதில். (11)

திலகப் பிறைநுதலார் சிந்தனையை நெஞ்சே
விலகப் பயின்றருளை மேவி—யுலகிற்
படரார் சனனப் பயமொழிக்கும் பேரூர்
நடராசன் சேவடியை நாடு. (12)

நாடு நகரு நமதென்ற பொன்பொருளுங்
கூடு நமருங் குழைந்தணையும்—பேடுநடை
யொத்த மனையாளு முடன்வாரார் பேரைவள
ருத்தமனைப் போற்றி ருவந்து. (13)

உவமானந் தாழ வுயர்பேரூர்ச் செல்வா
அவமாயென் நாள்கழிப்ப தானேன்—தவமா
கொடையா நடையா குணமா வெதையும்
அடையா வெனைப்பார்த் தருள். (14)

அரும்புவன நால்வேத மைம்பூத மான்ற
பெரும்புவன கோடிகளும் பீடார்—கரும்புவன
மீண்டுதிருப் பேரூ ரிறைவா நினதருளான்
மீண்டுமுனக் குள்ளாய் விடும். (15)

விட்டுவிட்டு நானு விதமாக வந்தவுட
லொட்டுமொத்தங் கண்டறிய வொன்றுமோ—பட்டதெலாந்
துன்பத்திற் கூட்டாய்த் தொலைந்தாலும் பேரூரா
யின்பத்திற் கூட்டா யினி. (16)

இனித்த மருந்தாகி யெப்பொருளி னுள்ளுந்
தனித்தமரும் பேரூர்த் தலைவன்—இனித்தமருந்
தாயும் பரிவுடைய தந்தையுமாய்க் கண்டுதொழ
வோயும் வினைக ளொழிந்து. (17)

ஒளியா யருவா யுருவாகி விண்ணாய்
வளியாய்க் கனல்சலமாய் மண்ணாய்த்—தெளிவா
ரகம்புறமுங் காணுகின்ற வம்பலப்பே ரூரா
இகம்பரமுங் காப்பா யெனை. (18)

என்னகத்தை மேவி யிருடிமிக்கு மாதவனே
பன்னகப்பூண் மார்பா பரமேட்ட—நன்னகப்பூங்
கொம்பனையாட் கன்பா குருமணியே பேரூரா
வம்பனையாட் கொள்வாய் மகிழ்ந்து. (19)

மகளிர் கருவிழிக்கு வாடார்மற் றன்னோர்
புகழில் கருவழிக்குப் போகார்—அகலின்
மயங்கார் மகிழார் மனநிலைத்தார் பேரூர்ப்
புயங்க னடியிணைகை பூண்டு. (20)

பூதத்தால் வந்த பொறிபுலனை மேவுடலி
னூதத்தாற் காட்டுதனி நாயகனைப்—போதத்தாற்
கண்டார்க்குத் தானே கதிகாட்டும் பேரூரான்
வண்டார்க்குஞ் சேவடியே வாழ்த்து. (21)

வாழ்வனைத்தும் பொய்யாய் மதித்து மறவிலங்கு
சூழ்வனத்திற் சென்ற துறவிகாள்—ஊழ்வினைக்கு
மாமருந்து பேரை வளநகரி லுண்டதனை
நாமருந்த வாரீர் நடந்து. (22)

நடவுழைக்கண் மெல்லியலார் நாற்றெடுத்துப் போற்றிக்
கடவுளைக்கை கூப்பிக் களிப்பாய்த்—தொடுவளைச்சங்
கார்க்க நடும்பணைசூ ழம்பலப்பே ரூரனடி
பார்க்க வினைபோம் பறந்து. (23)

பரந்தலைக்கை வீசிப் பலவினையும் போக்க
வரந்தலைக்கொள் காஞ்சி வளஞ்சூழ்—புரந்தழைக்கு
நீண்ட கொடிமே னிறைமாடப் பேரூர்வா
ழாண்டவனைப் போற்றி ரறிந்து. (24)

அரியானை யூரென் றறியானை யானை
யுரியானை யெங்குநிறை வுற்றுந்—தெரியானை
வண்டார் பொழிற்பேரூர் வந்ததரி சித்தவர்கள்
கண்டார் பிறவிக் கரை. (25)

கரையாத வென்றுடைய கன்மனம்போ விற்றை
வரையாரும் பெற்றிருக்க மாட்டார்—நரையாதி
வந்தங் கவலையற்று வாழ்கின்றேன் பேரூரா
யெந்தன் வினைவலிதா னென். (26)

என்றைக் குனதடிக்கீ ழெய்துகே னெம்பெருமா
குன்றைக் குனித்த குணவரையே—கொன்றைப்பூந்
தாராடுஞ் செஞ்சடையா தாண்டவனே பேரூரா
போராடு மென்வினையைப் போக்கு. (27)

போக்குவர வில்லாப் பொருளாய்ப் புராதனமாய்
நீக்கமற வெங்கு நிறைசிவமாய்—வாக்குமனம்
விண்டறியாப் பேரூர் விமலன்றாட் சேவையினு
முண்டுகொலோ வேறுசுவை யூண். (28)

ஊனுக்கு மின்னு ருறவுக்கு மிப்படியே
வீணுக் குழைக்க விதித்தாயே—மாணிக்க
நல்வரையே பேரூர் நடராசா வென்னுடைய
தொல்வினையைத் தீர்ப்பதென்றோ சொல். (29)

சொற்பனமே போலமைந்த தொல்லுலக வாழ்விதனி
லற்பசுகந் துன்ப மனேகவிதம்—நிற்பதனால்
நித்தன் றிருப்பேரை நேச னடியிணைக்கீழ்ச்
சித்தமுற்றார்க் கெய்துந் திரு. (30)

திருச்சிற்றம்பலம்.

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# பச்சைநாயகியம்மன் தோத்திரம்.



## காப்பு.

நண்ணிப் புகழ்பச்சை நாயகியார் சீரடியை
எண்ணிப் பதிக மியம்பவே—மண்ணிற்
றிருப்பேரூர்ப் பட்டித் திடவேழ மேவி
யிருப்பானென் னுள்ளத் தினிது.

திருவார் மலர்முக நீறணி வாணுதல் சேல்விழியு
மருவார் குழல்கொடி நாசிசெவ் வாயு மரைக்கழலுந்
தருவார் கரதல முங்காண வேதத் தவிசினின்றும்
வருவா யொருபச்சை நாயகி யாகிய மாணிக்கமே. (1)

மாணிக்கச் சோதி வரையிடம் பூத்த மாகதத்தைப்
பூணுக் கழுகைப் பொறுமைக் கடலைப் புவனமெலாம்
பேணிப் பணியும் பெரியாளை யாரும் பெறவிரும்பு
மாணிப் பொனைப்பச்சை நாயகி யாரென் றறைவதுவே. (2)

அடியார்க் கெளியவ ளன்பாற் பெரியவ ளாருயிர்க்குப்
படிபோட் டளந்தருள் பாலிக்குந் நாயகி பன்மறையின்
முடிமேற் றிகழ்கித்தி யானந்த பூரணி முப்புரமும்
பொடியாக் கியபச்சை நாயகி யென்வினை போக்குவையே. (3)

நீக்கஞ் சிறிது மிலதாகி யெங்கு நிறைபொருளாய்த்
தாக்கின்றி நின்ற பரவெளி யாகிச் சராசரங்க
ளாக்கின்ற தம்பல வீவர்க்கு மாருயி ராயிருந்து
காக்கின்ற தம்பச்சை நாயகி யாகிய சற்பகமே. (4)

பகர்கின்ற வேத புராணங்க ளாதிப் பலகலையும்
புகழ்கின்ற சோதி மயமாகி யண்ட புவனமெலாந்
திகழ்கின்ற தஞ்சச்சி தானந்த ஞானத் திரைக்கடலாய்
நிகழ்கின்ற தம்பச்சை நாயகி யான நிரஞ்சனையே. (5)

வான்கொண்ட செல்வ மனைத்தையும் வாரி வழங்கிடினு
மூன்கொண்ட தேக முயர்செம்பொ னாக வொளிபெறினுந்
தேன்கொண்ட கற்பக நீழலி லாட்சி செயத்தரினு
நான்கொண்ட பாத நழுவ விடேன்பச்சை நாயகியே. (6)

தொடர்பாகி வந்த பலகோடி சென்மத் துயர்க்கடலி
னிடரான் மயங்கித் தளர்வேனை நீகரை யேற்றுவையென்
றடலாவி யாவு முனக்குரித் தாக்கி யுனையடைந்தே
னடராசர் போற்று மணியா கியபச்சை நாயகியே. (7)

தேன்படுஞ் சொல்லியர் மோகாந்த காரச் சிறையினெடுங்
கான்படுங் கண்ணியிற் பாய்ந்தோடி வீழ்ந்து கலங்குகின்ற
மான்படு மாறகப் பட்டித ஞலிந்த வையகத்தில்
நான்படும் பாடொரு நாய்படு மோபச்சை நாயகியே. (8)

நாயுஞ் சிறிது பொழுதிளைப் பாறு நடந்தலுத்த
பேயுந் துயிலு மெனதகஞ் சார்ந்த பெருங்கவலை
யோயும் பொழுதில்லை யுன்பதம் போற்றி யுனையடுத்தே
னியென் னிடர்களை வாய்பச்சை நாயகி நின்மலியே. (9)

ஆட்டமெல் லாநின தானந்தத் தாண்டவ மாமெனது
வாட்டமெல் லாந்தெரி வாயருள் கூர்ந்து மனத்துயரை
யோட்டவல் லாயினி நின்பத மேகதி யுன்கருணை
நாட்டமென் மேல்வைக்க வேண்டுமம் மாபச்சை நாயகியே. ()

முற்றிற்று.

உ

குமரன்றுணை.

# திருப்பரங்கிரி

# குமரேசராநுபூதி.

---

## விநாயகதுதி.

நனிகற்பக நன்சருளும்பரவெற்
பினிகற்பக லோனெளிபெற்றெளிர்வேன்
முனிகற்பக வேவினர்சிர்மொழியக்
கனிகற்பக யானைமுகன்கழலே

## நூல்.

திருமங்கல தேவபரங்கிரியிற்
சருமங்கல வாதெனையாள்கனைகொண்
டொருமங்கல நற்பொருளுருடைவான்
வருமங்கல சம்புரிமாமணியே ... (௧)

தணியத்தகு வர்ப்பொருசுந்தரவே
லணியத்தகு மாரவெனக்கருள்விண்
பணியத்தகு மானபரங்கிரிவாழ்
புணியத்தகு லத்தொடுவாழ்பொருளே ... (௨)

இ லங்காதவ பஞ்சமெனுஞ்சிரனார்
பு லங்காதவ ர்போற்றுபரங்கிரிவா
மெலங்காதவ சத்திடியோனமருகா
க லங்காதவ கைக்கெனையாக்குவையே … (௩)

இலகச்சுட ரோசெய்பரங்கிரிவே
ணலகச்சுட னார்முலைநாரியரி
பலகச்சுட ல்விட்டுயிர்பாழ்நமனார்
விலகச்சுட லன்றும்வைமெய்யருளே … (௪)

பாசத்தமணாப் பிரியப்பணியாள்
வாசத்தமணாப் பரமாமலையாய்
நாசத்தமணாப் பெருமாநணவித்
தேசத்தமணாப் புரிசேவகனே. … (௫)

ஒ ருவாவினை கண்டொழிகந்தகிரி
ய ருவாவினை சேர்மதியானனர்மெய்
ம ருவாவினை யாவரமுந்தருவார்
பொருவாவினை யேன்பொருளன்னவரோ … (௬)

தேரப்படிவ ச்சிரமாமனமே
யாரப்படிவ த்தலையெங்கனுமார்
பாரப்படிவ ப்பரமாமலைவேள்
சேரப்படிவ த்திரமாறனலே. … (௭)

தருமந்தக வாழ்தருகந்தமலைக்
கருமந்தக யானனுக்கனுசன்
சருமந்தக னங்கழும்சேய்புரிநாள்
வருமந்தக ன்வாதைவிலக்குவனே … (௮)

ஒருவற்றுவ ராலொழிகந்தகிரி
மருவற்றுவ மென்முலைமாவணேவே
ஞருவற்றுவ கைப்பலனற்றுதவுந்
திருவற்றுவ செய்மயலைத்தவிரா ... (கூ)

நனிதாவர சங்கமநாதகுகப்
புனிதாவர தாபரபூதரனே
யினிதாவர லுற்றிவனென்பிழையை
மனிதாவர முன்னேவணங்கிடவே ... (ப)

அ னகாபர வெற்பிலமர்ந்தகுகா
ப னகாபர ணப்பரமன்றருமெய்க்
க னகாபர விக்கலுழ்வேனதுதே
மெனகாபர தேவரையெண்ணிலனே ... (பக)

பணியப்பணிய ப்பரவெற்பிடையாள்
புணியப்பணிய ற்புதவம்புலியின்
றுணியப்பணிய த்துவிதர்ப்பணிசூர்
தணியப்பணிய ச்சமர்செய்தவனே ... (பஉ)

சகலாகம முந்தழைகந்தமலை
புகலாகம ரீஇயொருபொற்பிடிசே
ரகலாகம முங்குரவாபிணிவந்
திகலாகம ஞூதருளெற்கினியே ... (பங)

அ ருவிப்பரவி த்துறுமுத்தளிவி
ழ ருவிப்பரவி த்தகவெற்பமர்வேள்
வெருவிப்பரவி ப்பணிவேன்மெயிலோர்
வ ருவிப்பரவி ப்பொரேறுப்வகையே ... (பச)

என்பந்தரவா முலையாரிடையார்
முன்பந்தரவா முழுதுங்தொலைபின்
பின்பந்தரவா விளையோய்பரவெற்
பன்பந்தரவா யுமயர்த்திலனே ... (௰௫)

பூ தானமனை த்திளையும்புரிசேர்
மீ தானமனை ப்பரவெற்பமர்பொற்
பாதானமனை க்கதிகம்பரிவே
ளுதானமனை த்தெறநன்கருளே ... (௰௬

சோகத்தினையா தபரங்கிரிசூழ்
யோகத்தினையா ஜறவுன்றுபசி
போகத்தினையா புதமாவெனுமா
னேகத்தினை யா ரிடமுற்றவனே ... (௰௭)

கருவந்தன தாவளரக்கருதுந்
திருவந்தன மேதினவிழ்மனமீங்
கிருவந்தன மேயுரிபிப்பரவெற்
டருவந்தன வாழ்வருள்பண்ணுவரோ ... (௰௮)

தமரக்கடவு ம்பலளித்தவள்சேர்
குமரக்கடவு ட்பரவெற்பிடைகூர்
சமரக்கடவு ற்றிடுசத்திரம
னமரக்கடவு ம்பரியூடறுமே ... (௰௯)

உலகாவலை விட்டதொடும்பவமே
விலகாவலை வந்தறமேவினமேற்
பலகாவலை மேயபரங்கிரிவே
ளலகாவலை நித்தடைத்தவனே ... (௨௰)

வானக்கலைவா ழ்வுறுமான்மதுவைத்
தானக்கலைவா ர்தருசாவளர்மெய்
மானக்கலைவா ய்வடிவேலுடையான்
ஞானக்கலைவா ய்நவிலெங்குருவே ... (உக)

சோரத்தனமா மனமேதுவசிங்
கா ரத்தனமா தனையுங்கருதே
லா ரத்தனமா ர்பரவெற்பதில்வேல்
சா ரத்தனமா தரவாகுவனே ... (உஉ)

அமராபதி மாதணைகந்தமலைக்
குமராபதி ஞாலலெங்குமகிழ்
சமராபதி கத்தமிழென்கணவா
வுமராபதி வாயுடையேனுளமே ... ... (உங)

ஒ ருவாரிக லாமுலையும்பலொடும்
வ ருவாரிக வாழ்வுமெனக்குவரத்
த ருவாரிக வாவிழிதண்கருணைப்
பெருவாரிக ளேபரவெற்பினிலே ... ... (உச)

புரவாதனை யோனெனுமென்புடைபூச்
சரவாதனை யுஞ்சகியேனருளைக்
கரவாதனை போற்புரிகந்தமலைக்
குரவாதனை யொத்திலகுங்குகனே ... (உரு)

தேவாகருணை த்திரியம்பகனார்
மாவாகருணை ப்புவிசூழ்மயிலோ
யீ வாகருணை ப்பரவெற்பினில்வேய்த்
தூவாகருணை த்தூவிடாதெனையே... ... (உசா)

மனமேகதியா வதுகேள்பரிதி
தினமேகதியா வருதேரொடுசூழ்ந்
தினமேகதியா வலினைய்பரவெற்
புனமேகதியா கியின்வேலுனையே ... (௨௭)

சிங்காரமட ந்தையர்செய்தசினே
சங்காரமட ங்களைவார்குகவே
டங்காரமட ர்ந்திடுசத்தியவெற்
பிங்காரமட ஞ்செய்திருப்பவரோ ... (௨௮)

சினநாயக ம்வைத்திடுமன்புடைய
மனநாயக லாதிவண்வாழ்குவன்விற்
பனநாயக லாவலர்சூழ்டரவெற்
பினநாயக வேள்புகழ்பேசிடவே ... (௨௯)

அருமாதவயா கமியற்றுவர்கட்
டிருமாதவயா தனைசேருவல்பன்
னிருமாதவயா விருள்மெய்க்கலின்மை
வருமாதவயா ன்மருவாதருளே ... (௩௰)

எனவாவித னுவிலையென்றிலையென்
சனவாவித னைக்களைவித்திடுசீ
சினவாவித ம்வாதிருமெய்க்கலில்வேண்
மனவாவித னந்தவிர்மாறிடவே ... ... (௩௧)

தினியம்பரமா நயனத்தியைக்
கணியம்பரமா திரமேகணினம்
பணியம்பரமா ல்பணிவோனெனவே
மணியம்பரமா ருசனுருவனே ... ... (௩௨)

வருமக்களை யுண்டுமெதர்த்திகலித்
தருமக்களை யின்றியதர்மம்வினை
கருமக்களை யெற்கருண்மெய்க்கலிலே
திருமக்களை யுற்றணைசேர்பவனே ... (௩௩)

அஞ்சக்கலக ள்ளமுளம்பெனவ
கஞ்சக்கலக த்தனைமெய்க்கலிலென்
னெஞ்சக்கலக த்துநினைந்திலனித்
தஞ்சக்கலக ல்லருடாருகனே ... ... (௩௪)

பரவப்பரவ ப்பரஞானமதே
விரவப்பரவ த்திரிமீதருள்வார்
சிரவப்பரவ த்திகளோனருள்சுந்
தரவப்பரவ த்தையுநீக்குவரோ ... (௩௫)

கதியாவது கேள்கடையெற்கருணன்
னிதியாவது லாநிமலாபரவெற்
புதியாவது வைக்குறுவோயெனநம்
புதியாவது போல்வனபொற்பகமே ... (௩௬)

கோவைத்துணியா யமைகொண்டொருமான்
மாவைத்துணியா வளமெய்க்கிரிவாழ்
தேவைத்துணியா நிதமெய்த்திலர்வாய்
நாவைத்துணியா துவிடானமனே... ... (௩௭)

ஒருவைச்சிர னுருதவும்பிடிசேர்
தருவைச்சிர மந்தவிர்கந்தமலைக்
குருவைச்சிர வந்தனைசெய்குனர்நற்
திருவைச்சிர வாதருள்வார்தினமே ... (௩௮)

ந ஞ்சத்தரவ மபொருவாகனநா
னெஞ்சத்தரவ ஞ்செயநின்றலேவே
ன ஞ்சத்தரவ ப்பரவெற்பதில்யா
று ஞ்சத்தரவ ந்தருளுன்னடியே ... (௩௯)

ப த்திக்கரக ம்படுகொங்கையர்சூழ்
முத்திக்கரக ங்கெடுமுற்பரவெற்
பி த்திக்கரக ங்கொங்சுற்றியிடிற்
ச த்திக்கரக ந்தர்தயாவருமே ... (௪௰)

வந்தித்தகலா துமதித்துனகால்
சிந்தித்தகலா மனனேத்தினமாள்
பந்தித்தகலா பமயூரபரஞ்
சந்தித்தகலா வரதாருகனே ... ... (௪௧)

இருவேலயவானகனுரிடமே
மருவேலய மேசொளுமாமனமே
பருவேலய னென்றபரங்கிரிவேள்
வருவேலய தோவிவண்வந்ததுவே ... (௪௨)

க னசத்தனகா ரமனேனெனுமுன்
பனசத்தனகா வளரும்பரவெற்
பினசத்தனகா பெரிதேறியுன
வனசத்தனகா றரவந்தருளே ... (௪௩)

க லவித்தனமா தர்களுல்விளைக
னலவித்தனமா திமெய்ஞாகமதைக்
குலவித்தனமா ளனிகொள்வமதித்
த லவித்தனமா குகர்தஞ்செயலே ... (௪௪)

சூதாகமன த்துநினைத்துவரு
மாதாகமன ப்புணர்மாசறவா
ஞுதாகமன ற்பரவெற்பிலமர்
வேதாகமன த்தியவேலனே … … (சரு

முருகாதுவ ராபுரிமுன்னமர்மான்
ம ருகாதுவ ஞாலிடைவான்மகளுக்
க ருகாதுவ ரார்பரவெற்பிலக
முருகாதுவ ராதுறையேனருளே … (சசு

தோலாவலையா ம்விழியர்துயார்செய்
சாலா வலையா ளர்தமக்கொழிசெவ்
வேலா வல்யா ருடைமேதினியின்
மேலா வலையா தருண்மெய்க்கவிலே … (சஎ)

ஒ ருசஞ்சன மர்க்குறுமால்புகழு
மி ருசஞ்சன லந்திகழின்பதவேள்
பெருசஞ்சன மார்பரவெற்பினிலென்
ன ருசஞ்சன மற்கெனவாளுவனே … (சஅ)

கருணாகர கந்தகுகா தமிழுக்
கருணாகர னேபரவெற்பமர்பொன்
வருணாகர கங்கொண்மருந்தினையம்
பருணாகர ஞல்பவமெற்கொழியே … (சகூ)

ஒருமாவலை யுற்றிடவேலைவிடுந்
தருமாவலை யுங்கதிர்சார்பரவெற்
பருமாவலை னேர்முலையானையிஞய்
வருமாவலை நின்னிடம்வைத்தனனே … (ருய)

நெஞ்சக்கனக ன்னெகிழ்வானெனையாள்
க ஞ்சக்கனக க்கழலீகுவர்மெய்
த ஞ்சக்கனக ந்தருமெய்க்கன்மைாக்
க ஞ்சக்கனக ந்தனொன்பினனோ ... (ருக)

---

திருப்பரங்கிரியனுபூதி
முற்றிற்று.

## திருப்பரங்கிரிக்கு நோயுடன்வந்தபொழுது சொல்லிய கவி.

தாங்கமுடியாப்பெருந்துயர் சித்தலுமேடரிநோயிடைவருந்து
சமயத்தருந்து மருந்துகளத்தனையுமதிகப்படுத்தினதோர்ந்

தோங்குமறிவிற்குமரனருளுண்டேற்றீருமெனப்பரங்குன்
றற்வுஞ்சிறிதுதுயர்தீர்ந்தேனுவந்துவலங்கொண்டாலயத்துட்

பாங்குபெறப்போய்நின்றழுதுபரவியெனக்குமெலிவுதவிர்
படியிற்றமையப்புரிதுயரம்பண்ணேனேயுந்தீர்த்திடென்றே

ஞங்குபூதிகூவிளைவந்தவைபேருணாத்தபணிலமுட
னமருந்தீர்த்தந்தம்பெயபணாயறைந்தமுருகனருளிதுவே.